# தலபுராணம் என்னும் கருவூலம் – 3

*July 23, 2010*

- முனைவர் கோ.ந. முத்துக்குமாரசுவாமி

**முந்தைய பகுதிகள்:**


- தலபுராணம் என்னும் கருவூலம் – 1
- தலபுராணம் என்னும் கருவூலம் – 2


**காஞ்சிப் புராணம் – வேதக் கருவூலம்** *(தொடர்ச்சி...)*

**நான்மறைப் பொருளாய்க் கதைக்கெலாம் இடனாய் நாற்பயன் உதவும்ஏ கம்பன்**
**மேன்மையுங் காம நோக்குடை இறைவி மேன்மையும் விளக்குவ திதுவே**
**நூன்முறை வருண நிலைகளின் ஒழுக்கம் நுண்ணிதின் தெரிப்பதும் இதுவாம்**
**பான்மையாற் காஞ்சிப் புராணமே நாளும் பயில்வுறக் கேட்பது மரபால்**
*(ஒழுக்கப்படலம் 30)*



*மாதவச் சிவஞான முனிவர்* இந்தப் புராணத்தில் வைதிக சைவ ஒழுக்கங்களைப் பழங்காலத்தில் அவை கடைப்பிடித்தவாறே கூறுகின்றார். இந்த புராணத்தைக் கற்றவருக்கு எந்த வைதிக நூல்களிலும் கூறப்பட்ட ஒழுக்கங்கள் தெரிந்துவிட வேண்டும் என்பது இந்நூலாசிரியர் கருத்து.

வைதிக சைவ நித்திய கன்மானுஷ்டானங்களை, சனற்குமாரர் என்னும் முனிவர்மேல் வைத்து **சனற்குமாரப் படலம்** என்னும் பகுதியில் விளக்குகிறார்.

நித்திய கன்மானுஷ்டானங்களைச் **சந்தி** என்றும் கூறுவர். வைதிகர்கள் செய்வது '*வைதிக சந்தி*'என்றும் சைவர்கள் செய்வது '*சைவ சந்தி*' என்றும் கூறுவர். சிவவழிபாடு உடைய அந்தணர்கள் இந்த இரண்டு வகைச் சந்திகளையும் கலந்து செய்வதுண்டு.

சந்தியின்போது செய்கின்ற கன்மங்களில் *பஞ்சப்பிரம மந்திரம், ஷடங்கமந்திரம்* ஆகியன தற்காலத்தில் வைதிக சைவர்களால் உச்சரிக்கப்படுகின்றன. அவற்றோடு, ஆசிரியர், '*அக்னிமீளே*' எனத்தொடங்கும் மந்திரம், ஜாபாலமந்திரம் ஏழாலும் அதர்வமந்திரம் ஆறினாலும் திருநீற்றை மந்திரிப்பதையும், திருவைந்தெழுத்தோடு திரியம்பக மந்திரத்தையும் கூறி ஆசமனம் செய்வதையும் திரியாயுஷ மந்திரமும் திரியம்பக மந்திரமும் கூறித் திருநீறை அணிவதையும் கூறுகின்றார். இங்கு இவர் கூறும் அனுட்டானம் இப்பொழுது சைவத்தில் இல்லை; வைதிகத்திலும் இல்லை என்று கூறப்படுகின்றது.

இக்காலத்தில் வைதிகர்கள் சந்தியின்போது வேதமந்திரங்களுக்குப் பதிலாக, *அங்கநியாசம், கரநியாசம்* முதலியன செய்யும்போது திருமாலின் பெயர்களாகிய '*அச்சுதா அனந்தா கோவிந்தா*'முதலிய திருநாமங்களையே உச்சரிக்கின்றனர் என அறிகிறேன். (அறிந்தவர் திருத்துக).

காலச்சூழ்நிலைகளின் காரணமாகச் சமயப் புறவொழுக்கங்களில் மாறுதல்கள் அவ்வப்பொழுது நிகழ்கின்றன. சிவஞானமுனிவர் அத்தகைய மாற்றங்களைக் கண்டு அவற்றை இப்புராணத்தில் பதிவு செய்து வைத்துள்ளார். வைதிகசைவத்தின் கன்மானுசார வரலாற்றை எழுதுவோருக்கு இப்பதிவு பெரிதும் துணை செய்வதாகலாம்.

சிவபூசையில் *அந்தரியாகம்* அல்லது *அகப்பூசை* என்பது ஒரு முக்கிய அங்கம். இப்பூசையில் சாதகன் தன்னுடைய ஆன்மாவையே இலிங்கமூர்த்தியாகவும் அதனில் சிவனை மூர்த்திமானாகவும் பாவித்து, புறத்தே செய்கின்ற வழிபாடுகள் அனைத்தையும் அகத்தே செய்வதாகும்.

இதனைச் சனற்குமாரர் செய்ததைக் காஞ்சிப் புராணம் கூறுகின்றது.

சனற்குமாரர் காயத்ரி மந்திரத்தை ஆயிரத்தெட்டு உரு கணித்தபின் யோக சித்தியின் பொருட்டு கணபதியை முன்பு பூசித்து, பின் '*அங்குட்ட ரூபியாஞ் சிவனை*' வரன்முறை அருச்சனை செய்தார் என்று கூறுகின்றது. இப்படிக்

கூறுவதால் இரண்டு செய்திகளை புராண ஆசிரியர் உணர்த்துகின்றார்.



இறைவனை *'அங்குட்ட'* ரூபியாக பாவித்தல் வேதத்தில் உள்ள செய்தி. தமிழ்நூல்களுக்கு இது புதியவரவு. இது ஒன்று.



**"ச'ரீர-ப்ராதே³ஸா²ங்கு³ஷ்ட மாத்ர மணோரப்யண்யம் த்⁴யாத்வாத: பரமதாங்க³ச்ச²தி"**

என்பது *மைத்ராயண்யுபநிஷத்* வசனம்.

இதன் பொருள், "சரீரத்தின் இருதயத்திற் பெருவிரல் வடிவாயுள்ள (ஒளி) வடிவில் அணுவுக்கணுவா யிருக்கின்றதைத் தியானித்துப் பரம்பொருளை அடைகின்றனன்," என்பதாகும். இதுவே *ஆத்மலிங்கம்* எனப்படும்.

இதயக் கமலத்தில் அங்குட்ட வடிவில் கண்டு சாதகன் அகத்தே தியானிக்கும் பொருள்தான் புறத்தே திருக்கோவில்களின் கருவறையில் உள்ள சிவலிங்கமாகும். ஆவுடையாரே அகத்தாமரை. இது இரண்டாவது செய்தி.

இவ்வாறு அகப்பூசை செய்த சனற்குமாரன் சிவபரம்பொருளின் திருநாமங்களை உச்சரித்துத் துதிக்கின்றான். அவற்றுள் பல வேத மந்திரங்களுல் பயிலப்பெறுவன.

**முக்கணன் புட்டி வருத்தனன் நீலப் பொன்மயன் முதிர்கறை மிடற்றன்**
**தக்க ஈசானன் வன்னிரே தாநற் சத்தியன் அருவினன் உருவன்**
**புக்கசீர்ப் புருடன் விச்சுவ ரூபன் புருட்டுதன் சிவன்புரு கூதன்**
**வைக்குமெய்ச் சத்துப் பராபரம் பரமான் மாமகத்துயர்பரப் பிரமம்**

இப்பாடலில் வேத மந்திரங்களான,

**த்ர்யம்ப³கம் யஜாமஹே ஸுக³ந்தி⁴ம் புஷ்டிவர்த⁴னம் |**
**உர்வாருகமிவ ப³ந்த⁴னான் ம்ருத்யோர் முக்ஷீய மாம்ருதாத் ||**

**ரு«தம் ஸத்யம் பரம் ப்³ரஹ்ம புருஷம் க்ருஷ்ணபிங்க³லம் |**
**ஊர்த்⁴வரேதம் விரூபாக்ஷம் விச்'வரூபாய வை நமோ நம: ||**

என்பதிலுள்ள பல திருநாமங்கள் தமிழ்ப்படுத்தி வந்துள்ளமை காண்க.

*[முக்கணன்– திரியம்பகன்*
*புட்டி வருத்தனன்– புஷ்டிவர்த்தனம் (அடியாருக்கு ஆற்றலை மிகச் செய்பவன்)*
*நீலப் பொன்மயன்– கிருஷ்ண பிங்களம் (சக்திபாகமாகிய இடப்பக்கத்தில் கருநிறமும் சிவமாகிய தன் வலப்பாகத்தில் பொன்னிறமும் உடையவன்)*
*ஊர்த்வரேதம்– இது வன்னிரேதா எனவும் கூறப்படும். வன்னி என்றால் நெருப்பு. நெருப்பு மேல்நோக்கி எழுவதைப்போல மேல்நோக்கி எழும் விந்துவை உடையவன் என்பது பொருள். யோகிகள் தம் யோகத்தால் இவ்வாறு ஆக்கிக் கொள்வர். சிவன் மகாயோகி. ஆதலால் இவனுக்கு இது இயல்பாக அமைந்தது.*
*புருட்டுதன்– புருஷன் (ஆன்மாவால் துதிக்கப்படுப்பவன்).*
*புருகூதன்– முன் அழைக்கப்படுபவன்.]*

சிவஞான முனிவர் இப்புராணத்தில், கதாபாத்திரங்களின் உரையாடல்களாக உபநிடத வாக்கியங்களை மொழிபெயர்த்து அமைத்துள்ளார்.

நந்தி தேவரை அணுகி சனற்குமார முனிவர் தம்மை மாணாக்கராக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டுகின்றார். தமக்கு இறைவனைக் காணும் உபாயத்தை அறிவிக்க வேண்டுகிறார். அப்பொழுது சிவனின் அனுக்கிரகத்தின் இன்றியமையாமையை,

**மானிடன் விசும்பைத் தோல்போற் சுருட்டுதல் வல்லோனாயின்**
**ஈனமில் சிவனைக் காணா திடும்பைதீர் வீடும் எய்தும்**
**மானமார் சுருதி கூறும் வழக்கிவை**

என்று சனற்குமார முனிவர் கூறுகின்றார்.

இதேபோன்று, **வயிரவேசப் படலம்** என்னும் பகுதியில், *'யானே முதல்வன்'* எனத் தருக்கிய பிரமனை நோக்கி வேதங்கள் சிவபரத்துவத்தின் உண்மையைக் கூறுவதாக அமைந்த பகுதியில், அதர்வ வேதம்,

**வளிதாழ் விசும்பைப் பசுந்தோலிற் சுருட்ட வல்லோர்**
**உளரேல் புடைவீங்கி எழுந்து திரண்டுருண்ட**
**இளவெம்முலை பங்கனை யன்றியும் இன்ப முத்தி**
**அளவிற் பெறலாம் என விண்டது அதர்வ வேதம்**

*[பசுந்தோலின்- பசியதோலைச் சுருட்டுவதைப் போல. ஆகாயத்தை ஒருவன் சுருட்ட வல்லனாயின், சிவனருளையின்றி ஒருவன் இன்ப முத்தி பெறலாம் என்பது இப்பாடல்களின் கருத்து. விசும்பைச் சுருட்டவும் முடியாது. சிவனருளையின்றி முத்தி பெறவும் இயலாது என்பது இவற்றின் கருத்து.]*

என்று கூறியதாக ஆசிரியர் கூறுகின்றார்.

இப்பாடல்கள்,

**யதா² சர்மவதா³காஸ²ம் வேஷ்டயிஷ்யந்தி மானவா: |**
**ததா² சி'வ மவிஜ்ஞாய துக்க²ஸ்யாந்தோ ப⁴விஷ்யதி ||**

எனும் அதர்வசிரோபநிஷத் வாக்கியத்தின் மொழிபெயர்ப்பு.

இந்த வேத வசனத்தைக் கந்தபுராணத்திலும், பிரமன் கூற்றாக,

**பரமசிவன் உணர்ச்சியின்றிப் பல்லுயிர்த்தொகையும் என்றும்**
**விரவிய துயர்க்கீ றெய்தி வீடுபே றடைதும் என்றல்**
**உருவமில் விசும்பின் தோலை உரித்துடுப் பதற்கொப் பென்றே**
**பெருமறை இயம்பிற் றென்னில் பின்னுமோர் சான்றும் உண்டோ**

என்று கச்சியப்ப சிவாச்சாரியார் மொழிபெயர்த்துள்ளார்.

அறிவுபோல் அடர்ந்து எழும் அறியாமையினது வலியால் ஒருமுறை வியாசர் பொய் கூறி சிவாபராதத்துக்கு ஆளானார். வியாசருக்குப் புத்தி புகன்ற விஷ்ணு,

**"ஏனை யாரையும் அறத்துறந்து யாவரும் என்றும்**
**பான்மையில் தியானஞ்செயப் படுமொரு முதல்வன்**
**மேன்மை கூர்சிவன் ஒருவனே" எனவிரித் தன்றே**
**நான்மறைத்தலை யாமதர் வச்சிகை நவிலும்**

என்று உரைத்ததாக சார்ந்தாசயம் என்னும் படலத்தில் ஆசிரியர் கூறுகின்றார். அதர்வசிகை என்றது, அதர்வசிகோபநிஷத்தை..

வியாசரிடம் மாதவர்கள் சென்று எமக்குச் சுருதி நூல் முடிபு இதுவெனத் தொகுத்துரை என்றனர். வியாசர் "அறிவு நூலெலாம் பன்முறை ஆயினும் தெளியப் பெறுவது ஒன்று, அது நாரணனே பரப்பிரமம்," என்றனர். மாதவர் இதனைக் காசியில் விசுவநாதர் சந்நிதியில் நின்று சொல்லுக என்றனர். விசுவநாதர் சந்நிதியில் நின்று வியாசர், **"நாரணனே பரப்பிரமம்,"** என்றபோது, எல்லாப் பெயரும் *'தன்பெயர் எனும் மறை*



*வழக்கால்'* விசுவநாதன் வெகுளாமல் வெறிமலர்க்குழல் உமையொடும் மகிழ்ந்து வீற்றிருந்தனன் என்று பாடுகின்றார்.

இங்கு குறிக்கப்பட்ட மறை சுவேதாசுவதார உபநிஷத். நாராயணன் முதலிய எல்லாப் பெயர்களும் காரணப் பெயராகவும் ஆகுபெயராகவும் சிவபெருமானையே உணர்த்தி நிற்கும் எனவும் எல்லாப் பெயரும் பரமசிவன் பெயரென்பதே வேதத்தின் துணிபு என்பது சுவேதசுவதார உபநிடதத்திற் கூறப்பட்டதென்றும் சிவஞான முனிவர் தம்முடைய சிவஞானமாபாடியத்துள்ளும் கூறினார்.

**"புருஷோவை ருத்³ரஸ் ஸன் மஹோ நம:"**

என்னும் வேத வாக்கியத்தை,

**'சீர்ப் புருடனாம் கண்ணுதல் தலைவன்'**

எனத் தமிழ்ப்படுத்தியுள்ளார்.

மகா நாராயணோபநிடத வாக்கியமான,

**ஈசா'ன: ஸர்வ வித்³யாநாம் ஈச்'வர: ஸர்வ பூ⁴தாநாம் ப்³ரஹ்மாதி⁴பதிர் ப்³ரஹ்மணோதி⁴பதிர் ப்ரஹ்மா சி'வோ மே அஸ்து ஸதா³சி'வோம்"**

என்பதை,

**"எக்கலைக்கும் பூதங்கள் எவற்றினுக்கும் பிரமனுக்கும் ஈசன் என்னத்,**
**தக்கமுதல் பரப்பிரமம் சதாசிவன் ஓம்"**

என மொழிபெயர்த்து ஆண்டுள்ளார்.

காஞ்சிப் புராணத்தில் திருவேகம்பப் படலம், தழுவக் குழைந்தபடலம் என்னும் இரு படலங்கள் மிகச் சிறப்பானவை. இவற்றைச் சார்ந்தே பிற படலங்கள் அமைக்கப்பட்டுள்ளன எனலாம்.

அவற்றுள் திருவேகம்பப் படலம் உலகத்தை ஒடுக்கிய இறைவனே அவற்றை மீளத்தோற்றுவித்தலைக் கூறுகின்றது. ஒடுங்கிய சங்காரத்தினின்றும் மீளத் தோன்றும் எனும் சைவ சித்தாந்தக் கோட்பாட்டை விளக்குவது இப்படலம். இப்படலத்தில் வேதங்களின் பெருமைகளையும் இறைவன் வாக்கில் கூறுகின்றார்.



உலகத்தைப் படைக்கத் திருவுளங்கொண்ட இறைவன், பகுப்பின்றிச் சூக்கும வாக்காகிய பரநாதமாக நின்ற வேதங்களை ஒற்றைமாமரமாக நிற்கும்படிப் பணித்தான். வேத சாகைககள் முதலியன பூ, அரும்பு, மென்தளிர், கனி, புதுமலர்களாகச் செறிந்து வேதம் நிழல்தரும் பெருமரமாக ஓங்கி நின்றது. அதன்கீழ் வீற்றிருந்து இறைவன் தன் இடப்பாகத்தில் **இலளிதை** என்னும் தேவியைத் தோற்றுவித்தான். தன் பணி யாது எனக் கேட்ட இலளிதயை நோக்கி இறைவன், *"நீள் உலகுக்கு உபாதானம் (முதற்காரணம்) நீ; நிமித்த காரணம் யாம். கரந்த வையகத்தைப் நின் பேரெழில் வடிவில் மீண்டும் தோன்றச் செய்!"* எனக் கூறினான்.

இலளிதை தன் வலக்கண்ணில் அயனையும் இடக்கண்ணில் அரியையும் , நடுக்கண்ணில் நெற்றியிற் கண்ணுடைய உருத்திரனையும் முத்தொழில் நடக்க ஈன்றாள். மற்றும் முகம் முதலிய உறுப்புக்களில் சொற்பிரபஞ்சம் பொருட்பிரபஞ்சங்களைத் தோற்றுவித்தாள்.

யாகத்துக்கு உரிய அக்கினிதேவன், காயத்திரி வேதம், அத்தியயனப் பயிற்சியின் போது அறிவதான காயத்திரி சந்தங்கள், சாமம், இரதந்திரம், தோமம், திருஷ்டுப் முதலியனவற்றையும் இலளிதை படைத்தாள்.



மும்மூர்த்திகளும் இறைவனைப் பணிந்து க, அ, ம, என்னும் அயன், அரி, உருத்திரன் ஆகிய எங்களைக் கண்களிற் படைத்த இலளிதையாகிய இவ்வம்மையார் காமாட்சி எனப் பெயர் பெறவும் இம்மாவடியில் நீங்கள் என்றும் இருக்கவும் வேண்டும் என்று வரம் வேண்டினர். இறைவன் அவ்வரத்தை அளித்ததோடு வேதம், வேதமந்திரங்கள் ஆகியவற்றின் பெருமைகளையும் கூறியருளினான்.

தழுவக் குழைந்த படலத்தில், ருத்திர காயத்திரியின் இரு வடிவங்களின் சிறப்பை ஒரு கதை நிகழ்ச்சியின் வாயிலாகக் கூறுகின்றார்.

**தத்புருஷாய வித்³மஹே மஹாதே³வாய தீ⁴மஹி**

**தந்நோ ருத்³ர: ப்ரசோத³யாத்**

என்பது ஒரு ருத்ர காயத்ரி.

மற்றொரு ருத்ர காயத்ரி மந்திரம்,

**ஸஹஸ்ராக்ஷஸ்ய புருஷஸ்ய வித்$^3$மஹே மஹாதே$^3$வஸ்ய தீ$^4$மஹி**
**தந்நோ ருத்$^3$ர: ப்ரசோத$^3$யாத்**

என்பது.

**"புருஷோவை ருத்ரஸ் ஸன்மஹோ நம:"** என்றதால் புருஷநாமம் சிவனைக் குறிக்கும் என்பது பெறப்பட்டது.

*'தத்புருஷாய'* என்ற முதல் மந்திரத்தில், புருஷனுக்கு என நான்காம் வேற்றுமையில், *"தற்புருடனாகிய சிவனுக்கு (எம் நினைவு) பொருந்த நினைகுதும். எமக்கு அவர் அருளுக"* என்பது பொருளாம்.

இரண்டாவது மந்திரத்தில், *'புருஷஸ்ய'* என்பது ஆறாம் வேற்றுமை உடைமைப்பொருளில், *"புருஷனுடைய (சிவனுடைய) சத்தியையும் எம் நினைவு பொருந்த"* எனப் பொருள்படும். சிவனும் சிவனுடைய சத்தியும் எமக்கு அருள்க என்பது கருத்து.

ஒரு கர்ப்பகாலத்தில், உறங்கி எழுந்த பிரமன், அகிலமெல்லாம் படைக்கும் வண்ணம் யாது என மயங்கியபோது இறைவன் உருத்திர காயத்ரியுடன் அழகிய குமரவடிவில் தோன்றி அளித்த பெருவரம் நினைவுக்கு வந்தது. அந்தக் குமார வடிவினை மனத்தில் நினைந்து, *"தத்புருஷாய வித்மஹே மஹாதேவாய தீம தந்நோ ருத்ரப் ப்ரசோதயாத்"* எனத் துதித்து, பின் படைக்கத் தொடங்கினான். படைத்தவையெல்லாம் ஆணாகவே இருந்தன. பெண்மையும் படைக்க முயன்றும் இயலவில்லை.



நான்காம் வேற்றுமைப்பொருள் தரும் பொருளை காயத்திரியை விலக்கி, *'சகத்திர நயனப் புருடன் தன்னுடைப் பேரருள் நினைகேம் உருத்திரப் பிரான் எமக்கு அருள்புரிக'* என்னும் பொருளுடைய "ஸஹஸ்ராக்ஷஸ்ய புருஷஸ்ய வித்மஹே மஹாதேவஸ்ய தீமஹீ தந்நோ ருத்ரப்ரசோதயாத்" எனத் துதித்துப் படைத்தபோது, அவனால் ஆண்மை, பெண்மை இரண்டையும் படைக்க முடிந்தது. இறைவனுடைய பேரருளே அம்பிகை எனப்படுகின்றது. சிவனையும் சத்தியையும் சேர்த்துத் துதித்தபோது இறைவன் அம்மையப்பராய்த் தோன்றிப் பிரமன் விரும்பியவாறு ஆண்மை பெண்மைகளைப் படைக்கும் ஆற்றல் பெற்றான் என இக்கதை கூறுகின்றது.

சிவ வழிபாட்டில் அட்டபுஷ்பம் சார்த்தித் தொழும்போது, *"ப$^4$வாய தே$^3$வாய நம:"* என இறைவனோடு, *"ப$^4$வஸ்ய தே$^3$வஸ்ய பத்ன்யை நம:"* என அம்பிகையையும் சேர்த்துப் போற்றுதல் மரபு.

**(தொடரும்)**

பின்குறிப்பு:

சம்ஸ்கிருத பதங்களை சரியான உச்சரிப்பின் படி தமிழில் எழுத Superscripted முறை பயன்படுத்தப் பட்டுள்ளது. உதாரணமாக क (ka) , ख (kha) , ग (ga) , घ (gha) என்ற எழுத்துக்கள் முறையே க, க$^2$, க$^3$, க$^4$ என்று வரும். இதே போன்று ச, ட, த, ப வர்க்கத்தில் உள்ள எல்லா எழுத்துக்களும் எழுதப் படும். சிவன் என்பதில் உள்ள 'श' என்ற எழுத்து **ஶி**' என்று குறிக்கப் பட்டுள்ளது. முழுப் பட்டியல் இங்கே பார்க்கலாம்.

**குறிச்சொற்கள்:** அகப்பூசை, அங்கநியாசம், அங்குட்ட ரூபி, அதர்வசிகோபநிஷத், அந்தரியாகம், அம்மையப்பர், இந்து மதம், இந்துத்துவம், இலளிதை, கன்மானுஷ்டானங்கள், கரநியாசம், காசி விசுவநாதர், காஞ்சிப் புராணம், காமாட்சி, காயத்ரி மந்திரம், கோயில், சக்தி, சந்தி, சனற்குமாரப் படலம், சனற்குமாரர், சமயப் புறவொழுக்கம், சார்ந்தாசயம், சிவன், சுவேதாசுவத்ரோபநிஷத், சைவ சந்தி, தமிழ், தமிழ் இலக்கியம், தழுவக் குழைந்தபடலம், திருவேகம்பப் படலம், தொடர், நந்திதேவர், பக்தி, பஞ்சப்பிரம மந்திரம், பிரமன், மகா